29th October 1958]

SRI C. NATARAJA ODAYAR : இந்தப் பரிசுகள் காங்கிரஸ் கட்சியைச் சேர்த்தவர்களுக்கே வழங்கப்படுகின்றன. வேறு கட்சிகளைச் சேர்ந்த ஹரிஜனத் தொண்டர்களுக்கும் இந்தப் பரிசுகள் வழங்கப்படுமா ?

THE HON. SRI P. KAKKAN : இந்தப் பரிசுகளை அரசாங்கத்தார், கட்சி வேற்றுமை பாராட்டாமல் கொடுக்கிறார்கள். மிகவும் ஹரிஜன சேவை செய்தவர்கள் காங்கிரஸ்காரரல்லாதவர்களாக இருந்தால் அவர்களுக்கும் பரிசுகள் கொடுக்கப்படும்.

SRI A. GOVINDASAMY : இந்தப் பரிசுகள் கட்சி வேற்றுமை பாராட்டப்படாமல் அளிக்கப்படுவதாக கனம் அமைச்சர் சொன்னார். ஆனால், இந்த ஆண்டு தென்னாற்காடு மாவட்டத்தில் அத்தனை பரிசுகளும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்களுக்குத்தான் கொடுக்கப்பட்டன என்பது கனம் அமைச்சருக்குத் தெரியுமா ?

THE HON. SRI P. KAKKAN : இந்தப் பரிசுகள் கட்சி வேற்றுமை பாராட்டப்படாமல் கொடுக்கப்படுகின்றன என்று நான் முன்பே சொன்னேன். தென்னாற்காடு மாவட்டத்தில் பிரஸ்தாப நபர்களுக்கு பரிசுகள் கொடுக்கப்பட்டதற்குக் காரணம், அவர்கள் மிக அதிகமாக ஹரிஜன சேவை செய்திருந்ததுதானே தவிர அவர்கள் காங்கிரஸ்காரர்களாக இருந்தது அல்ல.

*Bifurcation of South Arcot district*

* 681 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether the Government have taken any action so far to implement the scheme for the bifurcation of the South Arcot district as contemplated in the White Paper on Local Administration Reforms; and

(*b*) if so, where the headquarters of the new district is proposed to be located?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Not yet, Sir.

(*b*) Does not arise. The question will be decided in consultation with the district M.L.As. with due regard to administrative requirements.

SRI M. JAGANNATHAN : If and when the question is taken up for consideration, will the Government consider the desirability of locating the district headquarters at Tindivanam?

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I have not yet applied my mind to that aspect. When the question arises, certainly the hon. Member will be consulted.

SRIMATHI T. N. ANANDANAYAKI : May I know when it is likely to be considered and how long it will take?

THE HON. SRI C. SUBRAMANIAM : When the occasion arises.

SRI A. GOVINDASAMY : தென்னாற்காடு மாவட்டத்தை இரண்டாகப் பிரிக்கும் யோசனை இப்போது சர்க்காரால் கைவிடப்பட்டிருப்பதற்குக் காரணம் என்ன ? அந்த மாவட்டத்தை இரண்டாகப் பிரிப்பதற்கு முன் அறிகுறியாக அங்கே இரண்டு கல்வி இலாகா அதிகாரிகளும், இரண்டு

விவசாய அதிகாரிகளும் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். அப்படி இருந்தும், அந்த மாவட்டத்தை இரண்டாகப் பிரிக்கும் யோசனையை இன்னும் நடைமுறைக்குக் கொண்டுவராததற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஜில்லாப் பிரிவினை வேறு விஷயம், அதிக அதிகாரிகளை நியமிப்பது வேறு விஷயம். சில துறைகளைச் சேர்ந்த ஜில்லா அதிகாரிகள் சில ஜில்லாக்களில் ஒன்றுக்கு மேற்பட்டவர்களாக இருப்பது அந்த அந்த ஜில்லாக்களில் அந்த அந்தத் துறைகளில் உள்ள வேலை அளவைப் பொறுத்தது. முன்பு ஜில்லாவிற்கு ஒரு கல்வி அதிகாரியை வைத்துக்கொண்டே எல்லாப் பள்ளிக்கூடங்களையும் நிர்வகிக்க முடிந்தது. இப்போது அதிகமான பள்ளிக்கூடங்கள் ஏற்பட்டிருப்பதால் இரண்டு கல்வி அதிகாரிகள் தேவைப்படுகிறார்கள். சில ஜில்லாக்களில் மூன்று கல்வி அதிகாரிகளைப் போட்டிருக்கிறோம். அதற்கு, அந்த ஜில்லாக்களை மூன்றாகப் பிரிக்கப்போகிறோம் என்று அர்த்தமில்லை. அதே மாதிரி விவசாயத் துறையிலும் அதிக வேலை இருப்பதால் சில ஜில்லாக்களில் ஒன்றுக்கு மேற்பட்ட விவசாய அதிகாரிகளைப் போட்டிருக்கிறோம். ஜில்லாக்களைப் பிரிக்கும் திட்டம் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது. எந்த எந்த ஜில்லாக்களை முதலில் பிரிக்கவேண்டுமோ அவைகளை முதலில் பிரிப்போம். அவைகள் பரீட்சார்த்தப் பிரிவினைகளாக இருக்கும். அந்தப் பரீட்சார்த்தப் பிரிவினைகளின் அனுபவங்களைக் கணக்கில் எடுத்துக்கொண்டு மற்ற ஜில்லாக்களையும் தகுந்த முறையில் பிரிப்போம்.

SRI M. KALYANASUNDARAM : ஜில்லாக்களைப் பிரிவினை செய்வது சம்பந்தமான யோசனைகள் குறித்து இறுதியாக முடிவு செய்வதற்கு முன்பாக அவைகளை சர்க்கார் இந்த சபையில் சமர்ப்பித்து சபையின் ஆலோசனைகளையும் பெற்று முடிவுசெய்வார்களா ?

MR. SPEAKER : I would like to draw the attention of the hon. Member to Question No. 689 on which he can put his supplementary question.

SRI M. C. MUTHUKUMARASWAMY : சில ஜில்லாக்களில் இருக்கும் வேலை அளவிற்குத் தகுந்தபடி உள்ள குறைகளை நீக்க அதிகாரிகள் ஒருவரோ, இருவரோ, மூவரோ நியமிக்கப்படுகிறார்கள் என்று கனம் அமைச்சர் கூறினார். எல்லாத் துறைகள் தலைமை ஆபீஸ் சென்னையில் உள்ளதால் அவைகளையும் பிரித்து வெளி ஜில்லா தலை நகரங்களில் நிறுவ அரசாங்கம் முன் வருவார்களா ?

MR. SPEAKER : 689-வது கேள்விக்கு உப. கேள்விகளை போடும் போது இந்தக் கேள்வியை கனம் அங்கத்தினர் போடலாம்.

SRI A. GOVINDASAMY : தென்னாற்காடு மாவட்டத்தைப் பிரிக்கும் போது, புதிய மாவட்டத்திற்கு விழுப்புரம் மத்தியத்திலிருப்பதால் விழுப்புரத்தை அந்த மாவட்டத்தின் தலைநகரமாக அரசாங்கத்தார் அமைப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர்கள் ஸ்ரீ கோவிந்தசாமியும் ஸ்ரீ எம். ஜெகன்னாதனும் இது சம்பந்தமாகச் சேர்ந்து பேசி ஒரு தீர்மானத்திற்கு வந்த பிறகு, அத் தீர்மானத்தை சர்க்காரிடம் தெரிவித்தால் சர்க்கார் இந்த யோசனையைக் கவனிக்கலாம்.

*Army Store for Madras*

* 682 *Q.*—MR. SPEAKER : As the hon. Member Sri Chandrasekharan is absent, the question and answer will be printed in the Official Proceedings.